[Sri K. T. Kosalram] [17th February 1959

வரிச் சட்டம் இந்த ராஜ்யத்தில் அமுலாக்கப்படவில்லை என்பது என் அபிப்பிராயம். சட்டசபையில் 'பாஸ்' செய்த சட்டங்கள் எல்லாம் கோர்ட்டுகளில் செல்லுபடியாகாமல் போய், கோர்ட்டுகள் விதித்த 'ரூலிங்க்ஸ்', 'ஜட்ஜ்மென்ட்ஸ்' பிரகாரந்தான் இந்த அரசாங்கத்தின் நிர்வாகம் நடந்துகொண்டு வந்தது. சாதாரணமாக, குப்பைத் தொட்டியில் போய் விட்டன என்று சொல்வார்களே, அதேபோல் நியாயஸ்தலம் மூலமாகப் பல சட்டங்கள் செல்லுபடியாகாமல் போய்விட்டன. பல விதிகள் தவறுகப் போடப்பட்டதாகக் கருதப்பட்டன. அதன் மூலம் இந்த ராஜ்யத்திற்கு நியாயமாக வர வேண்டிய வருமானம் வராமல் குறைந்து போய் விட்டது. வரியை ஏமாற்றுகிறவர்கள் ஏராளம் பேர்கள் இருக்கிறார்கள் என்பதுதான் என் போன்றேரின் அபிப்பிராயம். பலமுறை இதைப்பற்றிச் சட்ட சபையில் பேசியிருக்கிறேன். அங்கத்தினர் ஸ்ரீ வி. வி. ராமசுவாமி அவர்கள் மந்திரியவர்களைப் பாராட்டினார்கள்; அவர்கள் மிக்க அக்கறை செலுத்தி ஆர்வம் காட்டினார்கள் என்று சொல்கிறார்கள். ஆகவே, பொது மக்கள் அல்லது சமுதாயத்திலுள்ள எந்த வகுப்பினரும் கஷ்டப் படவேண்டும் என்பது அரசாங்கத்தின் நோக்கமாக இருக்க முடியாது. அப்படி ஒரு அரசாங்கம், மக்களைக் கஷ்டப்படுத்தும் அரசாங்கம் இருந்தால், அது வெகு நாள் நீடித்திருக்க முடியாது. வியாபாரிகள் நிச்சயமாக இதை ஒத்துக்கொள்ளாமல் இருக்க முடியாது. வரியை ஏமாற்றுகிறவன்தான் பணக்காரனாகின்றான் என்று சாதாரணமாக வியாபாரிகள் பேசிக்கொள்வதுண்டு. யார் "ஸக்ஸஸ்புல்"லாக அரசாங்கத்தின் வரியை ஏமாற்றுகிறானோ அவன்தான் லட்சாதிபதியாக, அல்லது கோடீஸ்வரனாக முடிகிறது என்று வியாபாரிகளே பேசிக்கொள்கிறார்கள். ஆகவே, 'டாக்ஸ் எவேஷன்' இருந்தது என்பது ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயமே. ஸ்ரீ வி. வி. ராமசுவாமி அவர்கள் வியாபாரச் சங்கத்தின் தலைவராக இருக்கிறார்கள். பல மகாநாடுகள் கூட்டி அவர் பேசியிருக்கிறார். அவருக்கு அதிக நேரம் பேசுவதற்கு ஏராளமான அனுபவம் இருக்கிறது. அவரது அனுபவம் நமக்கு அவசியம். அந்த அனுபவம் மூலம், 'ஸிங்கிள் பாயின்ட் டாக்ஸ்' போட வேண்டுமென்பதைத்தான் எல்லா மகாநாடுகளிலும் அவர் பேசி யிருப்பதைப் பார்த்திருக்கிறேன். ஒரு முனை வரிதான் போட வேண்டும், பல முனை வரியால் வியாபாரிகள் கஷ்டமடைகிறார்கள், அதனால் பொது மக்களுக்கும் கஷ்டமிருக்கிறது என்பதுதான் வியாபாரிகள் மத்தியிலிருந்து வந்த கூக்குரல் என்பதை யாரும் மறுக்க முடியாது. அதை மறுக்கவும் மாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஆனால், தங்களுக்குச் சாதகமாக இல்லையென்று வரும்போது வியாபாரிகள், 'பலமுனை வரி போட்டுக்கொள்ளலாம், அதனால் பரவாயில்லை, அதைப்பற்றி எங்களுக்கு அக்கறையில்லை' என்று சொல்கிறார்கள். ஒரு சிலரிடம் இரண்டு மூன்று தினங்களுக்கு முன் அவர் பேசிக்கொண்டிருந்தார். அப்படிப் பேசிக்கொண்டிருந்தபோது, 'உங்களுக்குக் கஷ்டம் என்று சொல்கிறீர்களே, பலமுனை வரி போட்டால் ஐந்தாறு முறை வரி வாங்கப் போகிறார்களே அரசாங்கம், கடைசியாக ஆருவது முறையாகப் பொது மக்களிடம் அந்த வரியை வசூலிக்கப் போகிறார்களே, அப்படியானால் பொது மக்கள் கஷ்டப்படுவார்களே, ஆகவே ஒரு முனை வரியை எந்த இடத்தில் கொடுக்கலாம் என்று சொல்லுங்கள்' என்று கேட்டார். அப்படிக் கேட்கும்போது, அவர்கள் தங்கள் சங்கடத்தைத்தான் கவனிக்கிறார்களே தவிர பொது மக்களின் கஷ்ட நஷ்டம்பற்றி அவர்கள் சிந்திப்பதேயில்லை என்பதை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். குறிப்பாக, விறகுக் கடை வியாபாரிகளை எடுத்துக்கொள்வோம். முதலில் ஒருமுனை வரியாகப் போட்டிருந்தோம். பிறகு அதைப் பலமுனை வரியாக மாற்றிவிட்டோம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஒருமுனை வரி போட வேண்டுமென்று சொன்னபோது, பல்வேறு தூது கோஷ்டிகள் வந்தன. ஒருமுனை வரி எந்த இடத்தில் போடுவது என்ற பிரச்னை வந்த போது, அவர்களுக்குச் சங்கடம் வருகிறது என்று தெரிந்தவுடன், அவர்கள் ஓடிப் போகிறார்கள். பலமுனை வரி போடும்போது, ஒரு குறிப்பிட்ட வஸ்துவை எடுத்துக்கொள்வோம். விறகு வெட்டுகிறான், மத்தியில் ஒருவர் வாங்க வருகிறார். அதை வாங்கும்போது அங்கு வரி கொடுக்க வேண்டும், ஒரு கமிஷன் வியாபாரி வருகிறார். இப்பொழுது கமிஷன் வியாபாரியும் டீலர்

**17th February 1959] [Sri K. T. Kosalram]**

ஆகிவிட்டார். ஆகவே அவரும் வரி கொடுக்க வேண்டும். மத்தியில் ஒரு பிரோக்கர் வருகிறார். அவரும் இப்பொழுது ஒரு வியாபாரியாகிவிட்டார். அவரும் வரி கொடுக்க வேண்டும். அவருக்குக் கீழ் ரீடெய்லர் வருகிறார். ஆக ஐந்தாறு இடங்களில் பலமுனை வரி கொடுத்து அதற்குப் பின்னால் வருகிறார்கள் பொதுமக்கள். எல்லாவற்றையும் சேர்த்து அவர்கள் தலையில் பின்னர் திணிக்கவேண்டியதுதான். ஆக, ஒருமுனை என்று வரும் போது, வியாபாரிகள் அது தங்களுக்கு லாபமாக இருக்கிறது என்று வரும் போது, அதை ஏற்றுக்கொள்கிறோம் என்று சொல்வது நியாயமல்ல. மதிப்பிற்குரிய இந்தச் சபை அங்கத்தினர் வியாபாரிகளின் உற்ற தோழராக இருப்பதால், வியாபாரிகளுக்குப் புத்திமதி சொல்லவேண்டுமென்று தான் நான் இதைக் கூறுகிறேன். பொது மக்கள் வாழ்ந்தால்தான், வியாபார சமூகமும் நன்கு வாழ முடியும். ஒரு சிலருக்குக் கணக்கு வைத்துக்கொள்வதற்கு, கணக்கு எழுதி வைத்துக்கொள்வதற்குக் கஷ்டமாக விருக்கிறது என்ற காரணத்திற்காகப் பொது மக்களின் தலையில் ஏராளமான வரியைச் சுமத்துவது நல்லதா ? விறகை எடுத்துக்கொண்டால், ஒருமுனை வரி போட்டுவிட்டால், ரீடெய்லருக்கு மத்தியில் இருக்கிற ஐந்தாறு பேர்களுக்குப் போடுகிற வரி இல்லாமல் போய்விடும். அப்படி ஒருமுனை வரி போட்டால், விறகு பொது மக்களுக்குச் சௌகரியமான விலையில் கிடைக்க வழி ஏற்படும். அப்படிச் செய்தால், ஒரு குண்டிற்கு இரண்டணாவாவது குறைவாகக் கொடுக்கலாம். விறகு என்பது பணக்காரர்கள் மாத்திரம் வாங்கும் பொருள் அல்ல. அது "லக்ஷுரி குட்ஸ்" அல்ல. அத்தனை பேர்களுக்கும் அது அவசியப்படுகிறது. ஆகவே, வியாபாரிகள் தங்களுக்குக் கணக்கு எழுதி வைத்துக்கொள்ளக் கஷ்டமாக இருக்கிறது என்று கூறியதின் காரணமாக, அமைச்சர் திரு. வெங்கட்ராமன் அவர்கள் அதை ஒத்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. ஒருமுனை வரியால் $6\frac{1}{4}$ லட்சம் ரூபாய் வருமானம் வரும் என்று கணக்குப் போட்டிருக்கிறார்கள். ஆனால், பலமுனை வரி போட்டு, பிரோக்கர்களுக்குக் கொடுத்திருக்கும் எக்ஸெம்ஷனை எடுத்துவிட்டுப் பலமுனை வரி போட்டால், ஒரு குண்டிற்கு இரண்டணா அதிகரித்து 18 லட்சம் ரூபாய் வருகிறது என்று கணக்குப் போடப்பட்டிருக்கிறது. திரு. வெங்கட்ராமன் அவர்களுக்கு எல்லாம் நன்கு தெரியும். கடைசியாகப் பார்க்கப் போனால், திரு. வெங்கட்ராமன் அவர்களிடம் எல்லோரும் நன்கு மாட்டிக்கொண்டிருக்கிறீர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். அவர்கள் பேரில் குற்றம் சொல்ல முடியாது. நீங்களாகவே மாட்டிக்கொண்டிருக்கிறீர்கள். அமைச்சர் திரு. வெங்கட்ராமன் அவர்கள் 'நான் இதற்குத் தயார்' என்று சொல்லிவிட்டார்கள். ஆனால், வியாபாரி தான் 'எங்களுக்குக் கணக்கு எழுத முடியாது, எதை வேண்டுமானாலும் வரியைப் போட்டுக்கொள்ளுங்கள்' என்று சொல்லுகிறார்கள். இதில் அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கிறது. ஆகவே, இதை அமைச்சர் அவர்கள் கூர்ந்து கவனிக்க வேண்டும். இம்மாதிரிப் பொது மக்களுக்கு அசௌகரியம் ஏற்படக் கூடிய முறையில் வரியை விதிக்கக் கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏற்கெனவே விலைவாசி ஏராளமாக ஏறிக்கொண்டிருக்கிறது என்பது அரசாங்கத்தின் மீதுள்ள குற்றச்சாட்டு. அதற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கலாம். அதைப்பற்றி இப்பொழுது பேசவேண்டிய அவசியம் இல்லை. இந்த மசோதா அதற்கு இடம் கொடுக்கவில்லை. ஆதலால் நான் அதைப்பற்றிப் பேசவில்லை. விலைவாசியைக் கட்டுப்படுத்துவதற்கு, எந்த இடத்திலெல்லாம் அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டுமோ,
அங்கெல்லாம் கவனம் செலுத்த வேண்டும். விறகு மிகவும் அத்தியா 5 p.m
வசியமான பொருள். விறகு இல்லாமல் ஒரு மனிதன் இருக்க முடியாது. விறகு விலை அதிகமாக ஏறிக்கொண்டிருக்கிறது என்று சென்னை நகரத்தில் அடிக்கடி பெரிய தூதுகோஷ்டிகள் முறையிடுகின்றன. பெரிய கலாட்டாக்கள் நடக்கின்றன. அமைச்சர் அவர்கள் இதை மறுக்க முடியாது. இதில் அமைச்சர் அவர்கள் கவனமாக இருந்து, யாரோ கணக்கு வைப்பதற்குப் பயப்படுகிறார்கள் என்பதற்காக அவர்களுக்கு இடம் கொடுத்துவிடாமல், பொது மக்களுக்குச் சௌகரியமாக விலையைக் கட்டுப்படுத்துவதற்கு ஒரு முனை வரி போட்டு 'ரீடெய்லரி'டத்தில் கட்டுப்படுத்தலாமா என்று பரிசீலிக்க வேண்டும். அப்படி ரீடெய்லரிடத்தில் கட்டுப்படுத்த முடியாவிட்டால், சரக்கு எந்த இடத்திலிருந்து வருகிறதோ, அந்த இடத்தில்

அதைக் கட்டுப்படுத்தி ஒருமுனை வரியை வசூலிக்கலாமா என்பதை நன்ருக யோசித்துச் செய்ய வேண்டும். அது எங்கிருந்து பெறப்படுகிறதோ அந்த இடத்தில் வரி கொடுப்பதற்குக் கட்டுப்படுத்த முடியுமா என்பது நன்ருக யோசிக்கவேண்டிய விஷயம்.

*THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது நான் கனம் அங்கத்தினர் அவர்களை ஆலோசனை கேட்கிறேன். சாதாரணமாகச் சிறுசிறு விறகு வியாபாரிகள் கிராமங்களிலே இருக்கிருர்கள். சுள்ளி, சொட்டைகளை ஒடித்துக்கொண்டு வந்து விற்கிருர்கள். ஒருமுனை வரி போட்டால், அவர்களிடமிருந்தும் வரி வசூல் செய்ய வேண்டும். பலகட்ட வரி போட்டால், 10,000 ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்கிறவர்களிடத்தில்தான் வரி வசூலிக்க முடியும். எந்த முறையில் வரி போட வேண்டுமென்று அவர்கள் கேட்கிருர்கள் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

SRI K. T. KOSALRAM : நான் அமைச்சர் அவர்களுக்கு என்னுடைய சொந்த அனுபவத்தைச் சொல்லுகிறேன்.

SRI V. V. RAMASWAMI : உங்களையும் அமைச்சர் அவர்கள் மாட்டுகிருர்கள். பதில் சொல்லுங்கள்.

SRI K. T. KOSALRAM : நீங்கள் மாட்டிக்கொள்ளுகிற மாதிரி நான் நிச்சயமாக மாட்டிக்கொள்ள மாட்டேன்.

SRI V. V. RAMASWAMI : நாங்கள் 'பிராக்டிகல் பீபிள்'. நீங்கள் 'பிராபகாண்டிஸ்டு'.

SRI K. T. KOSALRAM : உங்களோடு பழகி நாங்களும் ரொம்ப 'பிராக்டிகல் பீபிளாகி' விட்டோம்.

இந்த விறகு வியாபாரம் எப்படி இருக்கிறது என்று கேட்டால், சாதாரண வியாபாரிகள் ரூபாய் 10,000, ரூபாய் 15,000 கொடுத்துப் பெரிய பெரிய தோப்பைக் காண்டிராக்ட் எடுக்கிருர்கள். நடக்கிறதை அப்படியே சொல்லுகிறேன். ஒரு புறத்தில் இம்மாதிரி நடக்கிறது. மற்ருெரு புறத்தில் சிறிய . . . . .

*THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை நகரத்தைப்பற்றி மாத்திரம் பேசிப் பிரயோசனம் இல்லை. கிராமங்களில் விறகு வியாபாரம் நடக்கின்றது அல்லவா ? சுள்ளிகளையும், உடைந்த கட்டைகளையும் தலையில் வைத்துக்கொண்டு வீடுவீடாகச் சென்று சிறுசிறு வியாபாரிகள் விறகு விற்கின்ருர்கள் அல்லவா ? ஒருமுனை வரி போட்டால், அவர்களும் வரி கொடுக்க வேண்டி வரும். அது வேண்டுமா, அல்லது ரூபாய் 10,000 வரை 'எக்ஸெம்ஷன்' வேண்டுமா என்பதுபற்றித்தான் அங்கத்தினருடைய யோசனையைக் கேட்டேன்.

SRI K. T. KOSALRAM : இரண்டாகப் பிரித்துவிடுவதில் ஒன்றும் தவறு இல்லை. நான் சொல்லுகிறேன். அமைச்சர் அவர்கள் கொஞ்சம் சிந்திக்க வேண்டும். நகரப்புறங்களைத் தவிர மற்ற இடங்களை எடுத்துக்கொண்டால், விறகுக் கடைகள் ஏராளமாக இருக்காது. சுள்ளி, சொட்டைகளை விறகாக வைத்துக்கொண்டு ஆங்காங்கு உள்ளவர்கள் ஆங்காங்கு சமாளித்துக்கொண்டிருக்கிருர்கள். விறகுப் பிரச்னை என்பது கிராமங்களிலே, சிறிய நகரங்களிலே கிடையாது. ரூபாய் 6 லட்சம் வரியில், 5-3/4 லட்சம் ரூபாய் சென்னை நகரத்தில் வசூலிக்கப்பட்ட வரிதான் ; ஜில்லாக்களிலிருந்தோ அல்லது கிராமங்களிலிருந்தோ விறகு மூலமாக உள்ள விற்பனை வரி அதிகமாக இருக்கவே இருக்காது. எங்கோ ஒரு சில இடங்களில் இருக்கக் கூடிய . . . . . .

*THE HON. SRI R. VENKATARAMAN : அதற்குக் காரணம் இன்றைக்கு ரூபாய் 10,000-க்குக் குறைவாக வியாபாரம் செய்கிறவர்களுக்கு

17th February 1959] [Sri R. Venkataraman]

விதி விலக்கு அளித்திருக்கிறோம். அதை மாற்றி ஒருமுனை வரி போட்டால், ஒரு ரூபாய்க்கு விறகு வியாபாரம் செய்யக்கூடியவர்களிடம் கூடப் போய் வரி கேட்கத்தான் வேண்டும்.

SRI MOHAMED RAZA KHAN : ஆமாம். (சிரிப்பு).

SRI K. T. KOSALRAM : நண்பர் திரு. ரஸா கான் அவர்கள் சர்க்காருக்குப் பரிந்து பேசுகிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : I seek the guidance of hon. Members.

SRI K. T. KOSALRAM : இதற்காகத்தான் நான் இரண்டு யோசனைகள் சொன்னேன் அமைச்சர் அவர்களுக்கு. ரீடெய்லரிடத்தில் கட்டுப்படுத்தி வரி வாங்க முடியுமா என்ற ஒரு யோசனையை முதலில் சொன்னேன். ரீடெய்லர் கணக்கு எழுதப் பயப்படுகின்ற காரணத்தினால், அவர்கள் வேண்டாம் என்று சொல்லுகிறார்கள் என்பதைச் சொன்னேன். ரீடெய்லரிடத்தில் வரி வசூல் செய்வதாயிருந்தால், நீங்கள் சொல்லுகிற கஷ்டம் வராது. ரீடெய்லரை விட்டுவிட்டு, எந்த இடத்திலிருந்து வருகின்றதோ அங்கேயே போய் வரி வசூலிப்பது என்று சொன்னால், அதில் நீங்கள் சொல்லுகின்ற கஷ்டங்கள் மட்டுமல்ல, பல்வேறு கஷ்டங்கள் இருக்கின்றன என்பது நன்றாகத் தெரியும். காடுகளில், ஊர்களே இல்லாத இடங்களில் தோப்புகள் இருக்கின்றன. அங்கு போய் அதிகாரிகள் கட்டுப்படுத்துவதில் சிக்கல்கள் இருக்கின்றன. அது சிக்கலான பிரச்னை என்பது நன்றாகத் தெரியும். உங்களிடத்தில் முதலிலேயே சொன்னேன். ஆகவே நகரத்தில் உள்ள நிலைமையை நன்றாகப் பரிசீலிக்க வேண்டும். இது மிகவும் சிக்கலான பிரச்னைதான். ஏதோ சொன்னார்கள் என்று குழப்பிக்கொண்டிராமல், எந்த இடத்தில் அதிகமாக வரி வருகிறதோ, எந்த இடத்தில் பெரிய அளவிலே வரியை வசூலிக்க முடியுமோ, அந்த இடத்தில் வரி போட வேண்டும். அவசியமில்லாத இடத்தில் வரி போட வேண்டியதில்லை. ராஜ்யம் பூராவுக்கும் ஒரு சட்டம் போட வேண்டுமென்பது அவசியமில்லை என்று நினைக்கிறேன். எந்த இடத்தில் இந்த வரியைப் போட்டால் அதிக வருமானம் வருமோ, அந்த இடத்திற்கு மட்டும் இந்தச் சட்டத்தைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியும். ஆகவே, இது மிகவும் நன்றாகப் பரிசீலிக்க வேண்டிய விஷயம். சென்னை நகரத்திலேதான் இது பெரிய பிரச்னையாக இருக்கிறது. எந்த விறகுக் கடைக்காரருக்கும் நான் வக்காளத்து வாங்கிப் பேசவில்லை. அம்மாதிரி வக்காளத்து வாங்கிப் பேச வேண்டிய அவசியமும் இல்லை. நான் பயப்படுகிறது என்னவென்றால் ஏழு முறை வரி கொடுத்து எட்டாவது முறையில் பொது மக்களிடம் வரி வாங்க வேண்டி வருமே, அதனால் விறகின் விலை ஏறிவிடுமே என்பது தான்.

SRI MOHAMED RAZA KHAN : அம்மாதிரி யாரும் சொல்லவில்லை.

SRI K. T. KOSALRAM : யாரும் சொல்லாமல் இருக்கலாம். சட்டம் இருக்கிறது. அம்மாதிரி நிலை வரப்போகிறது. வியாபாரிகளே ஒருமுனை வரி வேண்டாமென்று சொல்லுகிறார்கள். வியாபாரிகள் வேண்டாமென்று சொல்லுவதற்கு இரண்டு காரணங்கள் கூறுகிறார்கள். கணக்கு எழுத வேண்டியிருக்கும் என்பதுதான் முக்கியமான காரணம்.

மற்றொன்று, முட்டையைப்பற்றி நான் சொல்ல விரும்புகிறேன். அமைச்சர் திரு. வெங்கடராமன் அவர்கள் நிச்சயமாகக் கவனம் செலுத்த வேண்டிய விஷயம் இது. கேரள ராஜ்யத்தில் முட்டைக்கு விற்பனை வரி கிடையாது. ஆந்திர ராஜ்யத்திலும் முட்டைக்கு வரி கிடையாது. மற்ற எல்லா ராஜ்யங்களிலும் முட்டைக்கு வரி இல்லை. ஏன் இல்லை ? அங்கெல்லாம் முட்டை மிகவும் குறைவாக இருக்கிறது என்று சொல்லலாம். ஆனால், கேரளாவிலிருந்து சுமார் 8 லட்சம் முட்டைகளுக்கு மேல் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இலங்கைக்கும், கல்கத்தா, பம்பாய் போன்ற இதர

ராஜ்யங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அதேமாதிரி நாம் வாத்து முட்டைகளை ஏராளமாக அனுப்புகிறோம். நமக்குக் கோழி முட்டை வரு கிறது. இங்கிருந்து வாத்து முட்டை பிற ராஜ்யங்களுக்கு ஏராளமாகப் போகிறது.

SRI V. V. RAMASWAMI : ஒரு நாளைக்கு 2 லட்சம் முட்டைகள் போகின்றன.

SRI K. T. KOSALRAM : இங்கு N. E. S. ஏரியாக்களில் வீட்டுக்கு வீடு கோழி கொடுக்கவேண்டும் என்று சர்க்கார் நினைக்கிறது. அப்படி வீட்டுக்கு வீடு கோழி கொடுத்தால், கோழி முட்டை உற்பத்தி அதிகரிக்கும். கேரளாவில் வரி இல்லாத காரணத்தினால், "காம்பெடிஷன்" ஏற்படும். அங்கே "டாக்ஸ்" இல்லாத காரணத்தினால், வியாபாரிகள் அவர்களுக்குத்தான் ஆர்டர் கொடுப்பார்கள். இங்கிருந்து அன்னிய ராஜ்யங்களுக்குப் போகவேண்டுமானால், இம்மாதிரி வரி போடுவது நிச்சயமாக நம் ஜனங்களுக்கு இருக்கிற உற்சாகத்தைத் தடுப்பதாக இருக்குமே தவிர, அவர்களுக்கு உற்சாகத்தைக் கொடுக்காது. கோழி முட்டைகள் மூலமாகச் சாதாரணமாகக் கிராமவாசிகளுக்கு நல்ல வருமானம் வருகிறது. கோழிகளை அதிகமாக வளர்க்க வேண்டும் என்ற கருத்தை அரசாங்கம் நாடு முழுவதும் சொல்லுகின்றபொழுது, அதற்குப் புறம்பாக முட்டைக்கு வரி போடுவது கூடாது. இதிலிருந்து வரக்கூடிய வருமானம் மிகக் குறைவாகத்தான் இருக்கமுடியும். கோழி முட்டைக்கும், வாத்து முட்டைக்கும் வரியை எடுத்துவிட்டால், இவைகளெல்லாம் அழுகிப்போகிற பொருள்கள், ஆகவே ஆட்டுக்கறிக்கும் வரியை எடுத்துவிட வேண்டுமென்று கேட்பார்களோ என்ற பயம்தான் போலிருக்கிறது. இது உணவுப் பொருள் என்ற பெயரால் நான் வரி போட வேண்டாம் என்று கேட்கவில்லை. அழுகிப் போகிற பொருள் என்ற பெயரால் விதி விலக்குக் கேட்கவில்லை. நான் சொல்லுவது எல்லாம் பிற ராஜ்யங்களுக்குப் போகிற வியாபாரம், நமது கிராமங்களில் உட்புகுத்திச் செய்யப்பட வேண்டுமென்பதுதான். அதுதான் என்னுடைய கருத்து. ஆகவே, இதையும் அதையும்

[Mr. Chairman in the Chair]

5-10 p.m. குழப்பி இவையெல்லாம் உணவுப் பொருட்களைச் சேர்ந்தவை என்று சொல்லலாம். இருந்தாலும் இதில் இருக்கின்ற உண்மையைக் கவனித்துப் பார்த்து, கோழி முட்டைக்குப் போடப்பட்டிருக்கின்ற வரியை எடுத்துவிடுவதில் எந்தத் தவறும் ஏற்பட்டுவிடாது என்பதை அரசாங்கத்திற்குச் சொல்ல விரும்புகிறேன். இதை அமைச்சர் திரு. வெங்கட்ராமன் அவர்கள் ஒத்துக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். இதை மாற்றுவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன என்று வேண்டுமானால் சொல்லலாம். இதில் இப்போது திருத்தம் கொண்டுவந்தால், அதைத் திரும்பவும் கீழ்ச் சபைக்கு அனுப்ப வேண்டியிருக்கும் என்று சொல்லலாம். இருந்தாலும் இதில் இருக்கின்ற நிலைமை என்ன என்பதைப்பற்றி நாம் கவனித்துப் பார்க்க வேண்டும். நண்பர் திரு. வெங்கட்ராமன் அவர்கள் நல்ல வழக்கறிஞர். நண்பர் திரு. பாலசுப்பிரமணிய அய்யர் அவர்கள் இருக்கிறார்கள், ரிட்டயர்டு ஜட்ஜ் அவர்கள் இருக்கிறார்கள், அவர்கள் சட்டத்தில் இருக்கின்ற குறைகளைப்பற்றிச் சொல்லுவார்கள். இதைப்பற்றிச் சிலர் பொருட்களின் மீதுள்ள வரியைக் குறைப்பதற்கும் வரி விதிப்பிலிருந்து விலக்கு அளிப்பதற்கும் அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் அதிகாரம் செல்லாது என்று சொல்லுகிறார்கள். என்னைப் பொறுத்த வரையில், அரசாங்கம் இந்தமாதிரியான அதிகாரத்தைக் கையில் வைத்திருப்பதால், நான் கூறினது மாதிரி, சில பொருட்களுக்கு வரியை எடுத்துவிடுவதற்கு அரசாங்கத்திற்கு வசதியாக இருக்கும் என்பதால் இந்தவிதமான அதிகாரம் இருக்க வேண்டியதுதான் என்பது என் அபிப்பிராயம். "No man can be taxed except by authority of law" என்று அரசியல் சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. புதிதாக வேண்டுமானால் வரிகளைப் போடுவதற்கு அதிகாரம் இல்லாவிட்டாலும், வரிகளைக் குறைப்பதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்க வேண்டியதுதான்.

17th February 1959] [Sri K. T. Kosalram]

ஆகவே, இம்மாதிரியான அதிகாரத்தை வைத்திருப்பதில் எந்தவிதமான தவறுமில்லை. ஏற்கனவே நான் இந்தச் சபையில் சொல்லியிருக்கிறேன். அரசாங்கத்திற்கு எவ்வளவுதான் அதிகாரத்தைக் கொடுத்தாலும், அந்த அதிகாரத்தை அரசாங்கம் துஷ்பிரயோகம் செய்யுமானல், அந்த அரசாங்கத்தை மாற்றியமைப்பதற்கு மக்கள் தயாராக இருக்கிருர்கள். அதற்கு இடமும் இருக்கிறது. இன்றைக்குப் போடப்பட்டிருக்கும் சட்டங்களில் நீதிபதிகள் தவறுதலாக நடப்பார்கள் என்ருல், அதற்கு மேல் அப்பீல் செய்வதற்கு வகை செய்யப்பட்டிருக்கின்றது. இன்றைக்கு அமைச்சராக இருக்கின்ற திரு. வெங்கட்ராமன் அவர்கள் தவறு செய்தால், அவர்களைக் கண்டிப்பதற்கு மக்கள் இருக்கிருர்கள். அவ்விதம் ஏதாவது தவறு செய்வார்கள் என்ருல், அவர்கள் வீட்டுக்கு முன்னுலேயே கூட்டம் போட்டு, "திரு. வெங்கட்ராமன் அவர்களே, வெளியில் வந்து எங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லுங்கள்" என்று சவால் விட்டுக் கேட்கலாம். ஆகவே, நிர்வாகத்தை நடத்துகின்றவர்களுக்கு எவ்வளவு அதிகாரங்களைக் கொடுத்தாலும் அதில் தவறு ஒன்றுமில்லை என்பதுதான் என்னுடைய திடமான, பலம் பொருந்திய நம்பிக்கை. அரசாங்கத்தில் இன்று ஒருவர் இருக்கலாம், நாளை ஒருவர் வரலாம், இன்றைக்கு திரு. வெங்கட்ராமன் இருக்கலாம், நாளைக்கு நண்பர் திரு ஸ்ரீநிவாசவரதன் வரலாம், அடுத்த நாளைக்கு நண்பர் திரு. ரஸா கான் வரலாம்.

**Sri MOHAMED RAZA KHAN**: எப்படி வர முடியும்?

**Sri K. T. KOSALRAM**: வர முடியும், இந்த நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் இந்த அரசாங்கத்தில் வருவதற்கு அரசியல் சட்டத்தில் இடமிருக்கிறது. ஆகவே, இம்மாதிரிப்பட்ட விஷயங்களில் வரிகளைக் குறைப்பதற்கும் நீக்குவதற்குமுள்ள அதிகாரம் அரசாங்கத்தின் கையில் இருப்பதற்கு "கிளாரிபிகேஷன்" வேண்டும் என்று அமைச்சர் அவர்களிடத்தில் நண்பர் திரு. ரஸா கான் அவர்கள் கேட்டார்கள். இவ்விதமான அதிகாரம் அரசாங்கத்தினிடத்தில் இருப்பதைக் கண்டு யாரும் பயப்பட வேண்டிய தேவையில்லை. இவ்வித அதிகாரத்தை அரசாங்கத்தார் துஷ்பிரயோகம் செய்வார்கள் என்று யாரும் நினைக்கவேண்டியதில்லை. இன்றைக்கு அமைச்சராக இருக்கக்கூடிய திரு. வெங்கட்ராமன் அவர்கள் இந்த அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்வார்களானல், நாளைக்கு அவர் மந்திரி சபையில் இருக்கமாட்டார் என்பது நிச்சயம். ஆகவே, எந்தக் கட்சி அதிகாரத்தில் இருந்தாலும் சரி, அரசாங்கத்தை நிர்வகிப்பவர்கள் யாராக இருந்தாலும் சரி, அவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்வார்கள் என்ருல், அவர்கள் அரசாங்கப் பதவியிலிருந்து மாற்றப்படுவார்கள் என்பது நிச்சயம். ஆகவே, இந்த அதிகாரம் அரசாங்கத்தின் கையில் இருப்பதினுல் யாரும் பயப்பட வேண்டிய தேவையில்லை. இதனுல் அரசாங்கத்திற்குச் சில கஷ்டங்கள் ஏற்படலாம். இந்த அதிகாரத்தின் மூலம் பொருட்களின் மீதுள்ள வரிகளைக் குறைப்பதற்கும் வரிகளை நீக்குவதற்கும் முடியும். நண்பர் திரு. வி. வி. ராமசாமி அவர்கள் இதைப்பற்றிப் பாராட்டிச் சீராட்டிப் பேசினதற்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம். இதைப்பற்றி யோசிப்பதற்கு இன்னும் காலந்தாழ்ந்துவிடவில்லை என்றும் குறிப்பிட்டார்கள். எந்த விதத்தில் இதைப்பற்றி யோசனை செய்தாலும், இம்மாதிரிப்பட்ட அதிகாரம் அரசாங்கத்தின் கையில் இருப்பதால், எந்தவிதமான கஷ்டமும் இல்லை என்பதைத் திரும்பவும் நான் சொல்லிக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இதில் தண்டனையைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. இரண்டாவது முறையாகக் குற்றம் செய்தால், அவர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. வியாபாரிகளையெல்லாம் தண்டிக்கவேண்டும் என்ற நோக்கம் அரசாங்கத்திற்குக் கிடையாது. சில இடங்களில் அரசாங்க இயந்திரத்திற்குக் கோளாறு ஏற்பட்டுவிடுகிறது. இதனுல் தான் பொது மக்கள் பயப்படுகிருர்களே தவிர வேறு ஒன்றுமில்லை. பொது மக்கள் பயப்படுவது அமைச்சர் திரு. வெங்கட்ராமன் அவர்க

ளுக்கோ அல்லது முதலமைச்சர் திரு. காமராஜ் நாடார் அவர்களுக்கோ அல்ல. அரசாங்கத்தின் தேவதைகளாக இருக்கிறார்களே, அவர்களைப்பற்றித்தான் பயப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் செவ்வனே தங்கள் வேலைகளை நடத்துகிறார்களா என்பதை அரசாங்கம் கவனிக்க வேண்டும். அதிகாரிகள் சில சமயங்களில் சரியாக நடந்துகொள்ளாததினால், சில நல்லவர்களும் இவர்களுடைய குற்றச்சாட்டில் அகப்பட்டுக்கொள்கிறார்கள். அதிகாரிகளுடைய "ஹாரஸ்மெண்ட்" அதிகமாக இருந்துகொண்டிருக்கிறது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். அதோடு அதிகாரிகள் வியாபாரிகளை அவமரியாதையாகப் பேசுவது, வியாபாரி என்றால் ஏதோ தவறாக நினைப்பது, என்பது கூடாது. தவறு செய்கின்றவர்களைக் கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்க வேண்டியது தான். ஆனால் எல்லோரையும் அவமரியாதையான முறையில் நடத்தக் கூடாது. இதை அதிகாரிகள் நன்கு புரிந்துகொள்ள வேண்டும். வியாபாரிகளையெல்லாம் மரியாதையான முறையில் நடத்த வேண்டும் என்பதை அதிகாரிகள் ஓரளவுக்குத் தெரிந்துகொண்டால், அதிகாரிகளிடத்தில் வியாபாரிகளுக்குப் பயமே இருக்காது. நாம் அவர்களிடத்திலிருந்து வரியை வசூலிக்கிறோம், அவர்கள் வரியைக் கொடுக்கிறார்கள். ஆகவே, அதிகாரிகள் தங்கள் கடமையைச் செய்கிறார்கள் என்கின்ற உணர்ச்சி அவர்களுக்கு வரவேண்டும். அந்த உணர்ச்சி அதிகாரிகளுக்கு வந்துவிட்டால், அதிகாரிகளிடத்தில் வியாபாரிகளுக்கு இருந்துவருகின்ற பயம் போய்விடும். சமீபத்தில் வியாபாரிகள் எல்லாம் திருநெல்வேலியில் ஒரு கூட்டம் போட்டிருந்தார்கள். "இந்தச் சட்டத்தின் மூலம் வியாபாரிகளைக் கஷ்டப்படுத்த வேண்டுமென்று அதிகாரிகள் நினைத்தால், தண்டனைக்கு ஆளாக்க முடியுமே, அவர்கள் எங்களைக் கிரிமினல் குற்றவாளிகளைப்போல் நடத்துவதற்கு இந்தச் சட்டத்தில் இடமிருக்கிறதே, இதையெல்லாம் எந்தவிதத்தில் போக்குவது" என்றுதான் அவர்கள் குறைப்பட்டுக்கொண்டார்கள். ஒழுங்காக வியாபாரம் நடத்துகின்றவர்களை வேண்டுமென்றே அதிகாரிகள் ஏதாவது தங்களுடைய சொந்த மனத்தாங்கலின் பேரில் வஞ்சம் தீர்க்க வேண்டும் என்று நினைத்தால்—அவர்களை கருவறுக்க வேண்டுமென்று நினைத்தால்—இந்த அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்ய ஆரம்பிப்பார்கள். உண்மையாகவே அரசாங்கத்தை ஏமாற்றுகிறவர்களைக் கண்டுபிடித்துத் தண்டனை கொடுக்கவேண்டியதுதான். ஆனால், அவசியமில்லாமல் வேண்டுமென்றே கஷ்டங்களை உண்டுபண்ணுகிற அதிகாரிகளைக் கண்டுபிடித்து சரியான விதத்தில் கண்டித்துவிட்டால், இந்தமாதிரியான தவறுகள் நடவாமல் போய்விடும். தவறுகள் இழைக்கப்படும் இடத்தில் தவறு இழைத்தவர்கள் யார் என்பதை அரசாங்கம் கண்டுபிடித்து அவர்களைத் திருத்திவிட்டால் இந்தக் குறை இல்லாமல் போய்விடும். இன்னொன்று. விறகைப் பற்றிப் பேசினேன். இதில் "Wood" என்று சொல்லப்பட்டிருக்கிறது. "All kinds of wood and timber and similar articles" இந்த வார்த்தைகளை வைத்துக்கொண்டு வியாபாரிகள் அரசாங்கத்தை ஏமாற்றுவதற்கு முயற்சி செய்வார்கள். "வுட்" என்பதும் "டிம்பர்" என்பதும் வேறு. கருவேப்பிலை மரம் இருக்கிறது, மாமரம் இருக்கிறது. இவைகளிலிருந்து பலகை எடுக்கப்படுகிறது. ஆகவே, இவைகளை எல்லாம் "வுட்" என்று சொல்லலாம். ஆனால், இவைகள் எல்லாம் விறகுக்கு அதிகமாக உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றன. இந்தமாதிரியான பல குழப்பங்கள் வந்து சேரலாம். சட்டங்களை அமுல் நடத்தும்போது, இம்மாதிரிக் குழப்பங்கள் ஏற்படக் கூடாது என்பதுதான் என்னுடைய விருப்பம். ஆகவே, இதில் "வுட்" என்ற வார்த்தையை நீக்கிவிட்டால் நன்றாக இருக்கும் என்பது என் அபிப்பிராயம். இப்போது திருத்தம் கொண்டுவரவேண்டுமென்றால், இனிமேல் திரும்பவும் "லோயர் ஹௌஸ்"க்குப் போக வேண்டியிருக்கும் என்று அமைச்சர் அவர்கள் வேண்டுமானால் சொல்லுவார்கள்.

**THE HON. SRI R. VENKATARAMAN** : அதைப்பற்றி ஒன்றுமில்லை, இப்போது சட்டசபை நடந்துகொண்டுதான் இருக்கிறது.

17th February 1959]

**Sri V. V. RAMASWAMI** : அப்படியானால் ஒரு திருத்தத்தைக் கனம் அங்கத்தினர் அவர்கள் கொடுக்கலாமே.

**Sri K. T. KOSALRAM** : அதனாலே, "Wood" என்ற வார்த்தையை எடுத்துவிட்டால் நன்றாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

இன்னும் கூடுமான வரையில் சர்க்காருக்கு இருக்கும் 'எக்ஸெம்ஷன் பவர்' களைக் கொண்டு விதி விலக்கு அளிக்கலாம். இன்னாறு தான் அதைச் செய்யவேண்டுமென்று அவசியமில்லை. சந்தர்ப்பம் ஏற்படும்போது, நியாயம் என்று படும்போது அரசாங்கம் விதி விலக்குக் கொடுக்க வேண்டும். விதி விலக்குக் கொடுத்தால் யாராவது ஏதாவது செலவழித்துவிடுவார்களோ என்று எண்ணாமல், நியாயம் என்று நினைத்தால், வியாபாரிகளை மட்டும் 5-20 p.m.
மனதில் வைத்துக்கொண்டு எதையும் செய்யாமல், பொது மக்களை, வியாபாரிகளை இரண்டு பேரையும் மனதில் வைத்து, சிறு சிறு விஷயங்களில் எங்கெங்கே எக்ஸெம்ஷனை கொடுக்க வேண்டுமோ அங்கெல்லாம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**Sri K. BALASUBRAMANYA AYYAR** : Mr. Chairman, Sir, at the outset, I wish to congratulate the Hon. the Minister for Commercial Taxes on having brought to bear upon the consideration of the Sales Tax Bill all his ability as a lawyer and his experience as a Minister. He also took care to refer the whole matter to an economic expert like Dr. Lokanathan. He produced a very good Report. This Bill is based mainly upon his Report though I should say that some of his recommendations have not been accepted. This Bill was brought in and it was subjected to very strict scrutiny at the sittings of the Select Committee. We felt at the time of the sitting of the Select Committee that the presence of the Hon. Minister was very valuable. That was why we adjourned for some time to await his arrival from his foreign tour. We found that many of the problems posed were thoroughly discussed. Wherever it was possible, he kept an open mind and he was able to agree to some of the important things. Wherever he did not agree, it was because of the exigencies of the situation and also due to the varying impressions on our part. For example, as regards single-point levy and multi-point levy, I do not think even the merchants are very clear. We ourselves are not at all clear about it. The Committee took the further step of hearing representations from Chambers of Commerce, Merchants' Associations and individual merchants. Every concerned interest was consulted and we heard fully all the representations. But we found, after hearing all these representations, that the merchants themselves were not clear as to whether a single-point levy would be to their benefit or a multi-point levy. I attended the first Merchants' Conference. At that time, we were anxious to hear the views of merchants. When we considered the question calmly, we thought that a single-point levy would be the best for the merchants. But when the matter came up for discussion and when we found various figures, sometimes multi-point levy seemed to be better than single-point levy. I shall take the case of firewood that was mentioned by the hon. Member Sri Kosalram. This point was raised. But the difficulty that was pointed out to us was that if it was a single-point levy, we would

have to levy it in all places, and on even smaller dealers. If it was a multi-point levy, we could have it for a turnover over Rs. 10,000. So, the particular point that the retail dealers would be going on increasing the rate was present in our mind. But how to do the thing was the difficulty. In the case of sales tax, the difficulty arises as to the adjustment between the single-point levy and the multi-point levy. All the difficulties in a particular transaction like evasion and keeping of accounts have to be taken into consideration. At the same time, if it is a multi-point levy, the rate increases and the difficulty of the consumer has to be considered. Therefore, it is better not to take any particular sides in this matter once there is sales tax As we all know, sales tax is an indirect tax. Merchants pass it on immediately to the consumer. Therefore, the problem of the consumer should always be present in the background when we consider the matter. Never mind the difficulties of the merchants, our difficulties here as legislators and the difficulties of the Courts in interpreting the law. Apart from all these things, we have to take into consideration the final effect of this tax upon the consumer. We should not do anything to harass the merchants or to impede the trade. These are all things which are accepted. The Report of Dr. Lokanathan mentions categorically all these principles. That is why I do not think much benefit will accrue to us in discussing the general principles over again here. They have been thrashed out fully and completely without any prejudice or without taking sides. Madras State has led in the matter of sales tax. This State was the first to introduce sales tax.

SRI A. M. ALLAPICHAI : Prohibition also.

SRI K. BALASUBRAMANYA AYYAR : Yes. But in the matter of Prohibition, it has not been followed by many other States. In the matter of sales tax, all other States have followed us. Even in States where there is no Prohibition, there is sales tax.

SRI A. M. ALLAPICHAI : It is very difficult for them to fall in line with us in the matter of Prohibition.

SRI K. BALASUBRAMANYA AYYAR : For the last twenty years we have seen the working of this Act. One of the chief difficulties is the harassment of the merchants. The difficulties of small dealers also have to be taken into consideration. These are all important things. In some cases merchants have to be always in the Commercial Tax Offices. They cannot attend to their trade. The second difficulty is the keeping of accounts. In the case of small dealers like those in vegetables, the nature of the transaction may not admit of keeping accounts. These are all things that have been borne in mind by the Members of the Select Committee and especially the Minister. Therefore, there is not much of criticism, I would say, in regard to this Bill except

17th February 1959] [Sri K. Balasubramanya Ayyar]

in regard to one or two important points. Many provisions have now been introduced for the purpose of checking evasion. One other benefit that has accrued from a consideration of this Bill is the provision for appeals and the differentiation in the nature of appeals and the subject-matter of appeals. Different Courts are proposed to be established for this purpose—Board of Revenue, High Court, etc. Everybody has been given full power to rectify any mistakes that might have crept in. Any mistakes that are apparent on the face of the record can be reviewed. Only the question cannot be reviewed twice. Therefore, I think, on the whole, this sales tax legislation has been conceived quite properly. The various provisions have been dealt with and introduced here with a view to checking the evasion of tax and also with a view to seeing that, as far as possible, the difficulties of traders in regard to the maintenance of accounts are minimised. The provisions have been made with a view to seeing that there is no harassment of traders. But still there may be harassment because when we give power to a large number of officers, there may be harassment of traders. We have in this Bill made provision for finding fault 5 30 P.M.
at every turn and checking whether any evasion takes place. So, there may be cases of abuse. This is always there. We cannot help it. Anyhow, this is a matter in which we have to be very careful. Instructions will have to be given to the officers to deal with the traders in a very lenient fashion so that they may not be unduly or unnecessarily harassed. This is a general matter altogether so far as this Bill is concerned. I think, on the whole, this Bill has come in a proper shape, though here and there we will make representations still. I may assure Sri Kosalram that the levy of this tax is not unconstitutional. That was the argument in Courts before, as you all know. The levy of sales tax was said to be unconstitutional. But everything has been set at rest. Even in Courts one will find there is not much scope for lawyers; even so for judges to decide any points. (Sri K. T. Kosalram : So glad to hear it.) The whole thing has been looked into, and so far as I can myself see, there is very little scope for any misinterpretation or for any tendency to litigation in this Bill. I hope and trust . . .

SRI V. V. RAMASWAMI : 'Bill' சரியாக இருக்கிறது என்றுதானே சொல்கிறீர்கள்? அவர்கள் கோர்ட்டுக்குப் போகக்கூடாது என்று சொல்லவில்லையே?

SRI K. BALASUBRAMANYA AYYAR : I do not think we should in a democracy ever distrust Courts. Courts ought to be there and should be there. Some people may commit mistakes. That is no reason why we should say that Courts should not be there. Especially in regard to a taxation measure, Courts have got full power and full responsibility. I do not ask people to go to Courts. The people who pay the tax go to the Courts. We cannot prevent them from going to Courts. It is their interest. They will go to Courts when they are effected.

Sir, as was said long ago, nobody likes to pay taxes, however much we might say that people will give taxes. The art of Government is to see how to get revenue. These are the two things that will always be there. Therefore it is I am stating here that so far as this Bill is concerned, all of us should be really happy that a consolidated Bill, with a great deal of attention paid to its details, has been finally put before us. . .

SRI V. V. RAMASWAMI : அதில் 22 செக்ஷன்கள் இருந்தன இதிலே 61 செக்ஷன்கள் இருக்கின்றன.

SRI K. BALASUBRAMANYA AYYAR : There are a number of Schedules. There are one or two matters about which I still want to make mention. They are questions of principle. There is one thing which was discussed from time to time,, and that is the tax on foodgrains. The Report of Dr. Lokanathan mentions about it. He comes to the conclusion that there cannot be a total exemption now from tax. He does not favour exemption immediately, but he is for a concessional rate of half a per cent. This was his idea. Finally, he says on page 15 of his Report—

" . . . If and when it is found that the revenue receipts from the single-point levy are adequate and may be safely relied upon to yield at least the present level of revenues, I suggest the following order of priorities for giving further relief :—

(1) The turnover limit should be raised to Rs. 25,000;

(2) all essential articles, e.g., foodgrains, milk should be exempt from taxation; and

(3) the multi-point levy may be altogether abolished."

I am now making reference to item 2, namely, all essential articles, e.g., foodgrains, milk, etc. These should be exempt from taxation. But Dr. Lokanathan has recommended that a concessional rate of half a per cent may be there. Finally, he puts it this way—

" There is a widespread demand in the State for the abolition or at least a reduction of the tax on essential commodities. While on grounds of equity they may deserve exemption, I am not recommending it for two reasons :—

(i) An exemption would remove one of the important ways in which a large mass of the people can be made to contribute at least something to the resources needed for developmental effort; and

(ii) until the revenue yield under the reformed system is clearly known, it would be safer to retain the tax."

I feel that on the whole—I am only prognosticating—under the reformed system, the Government will get more revenue. He too can only prognosticate.

17th February 1959]

SRI V. V. RAMASWAMI : 14 கோடி கிடைக்கும் என்று சொல்லி விட்டார்களே.

SRI K. BALASUBRAMANYA AYYAR : Dr. Lokanathan again says—

"However, in deference to the justifiably insistent demand for relief as well as broad economic and social grounds, I recommend that a concessional rate of half per cent on foodgrains, pulses and vegetables including fresh coconuts be levied. I also recommend that milk which is an essential article of food to the people be taxed at the concessional multi-point rate of half per cent."

This is the conclusion of Dr. Lokanathan. But here in the Bill we have said that the rate shall be one per cent in the case of foodgrains, namely, wheat, paddy (rice in husk), cholam, cumbu, etc. Therefore, one per cent is the rate of foodgrains. There is now a high rise in the prices of foodgrains. This problem has not yet been fully solved. There may be State trading in foodgrains also. Our final goal is that the State should purchase rice or paddy from the producers themselves. At present, the Government are procuring the grain from the wholesale dealers and millers. Our economic objective is that purchasing should be done, as in Japan, by the State itself. The State should finally purchase from the producers themselves and be responsible for giving all credit facilities through co-operative societies to all the producers. That is the economic objective we have. In order to lead up to that economic objective and in order to see that there is no increase in price under the pretext that various intermediaries come in and pay tax, and also in order to realise our economic objective, I would strongly appeal to the Government to take full courage in their hands and see that foodgrains are exempted from this tax. This is a thigh which I would appeal strongly to the Government to do. This is my first point. More than this I need not dilate upon at the present moment.

SRI A. GAJAPATHY NAYAGAR : There will be loss of revenue.

SRI V. V. RAMASWAMI : 50 லட்சமோ என்னவோ கணக்குக் கொடுத்திருக்கிறார்கள்.

SRI K. BALASUBRAMANYA AYYAR : Even if there is a loss of revenue, it has been suggested by Sri K. Santhanam that we could replenish it by taxation at source. That can be considered. That is a matter for the consideration of the Government. I cannot give any solution to the Government. But there is a very insistent demand for exemption, and this is necessary so far as the economic adjustment in our country is concerned, especially when the problem of rise in prices has not yet been fully solved and self-sufficiency has not yet been attained. Some of the figures may say that we have attained self-sufficiency, but as a matter of

[Sri K. Balasubramanya Ayyar] [17th February 1959

fact, self-sufficiency has not been fully reached. Therefore it is I state that we must, as a pure question of economic policy, consider the question of giving exemption to foodgrains. Dr. Lokanathan also says that we must take into consideration the economic development and social grounds. Taking all these social and economic grounds into consideration, I think, even if there is some likelihood of loss of revenue, which can be replenished otherwise, we must grant exemption to foodgrains. When we introduced Prohibition, we lost Rs. 17 crores. Therefore it is I say that we must do it. I would strongly appeal to the Government to do it. It was said that after the resources were completely known, they would think of doing it. Even now, they may consider this point. That is my submission and that is my appeal to the Government. That is my request to the Government at this juncture. I shall leave the matter at that. It is purely a matter of economic policy, because it affects the consumer and the consumer is put
5-40 p.m. to great difficulty. We are unable really to abolish the intermediaries. It is very difficult to do that. Between the actual producer and the consumer, there will be five, six or even seven intermediaries. They could not be abolished so easily. There will be not less than five of them. If and when the intermediaries are abolished, are done away with, we will find that the producer himself is satisfied and that the prices go down. That is my view. How to do it and how to effect a reduction in the prices? That is the problem. It has not been solved yet. As yet, no economist has helped us to solve this problem. Nobody is able to give the reason for the rise in prices. It has been said that it may all be due to the tempo of activities during the First Five-Year Plan period and now the current Second Five-Year Plan period. Now, we may expect that the tempo will be still greater in the years to come. In that case, the prices will never go down. Of course, we want tempo. But, it is for the economists to give us the solution in this regard. It is for experienced administrators to put their heads together and suggest ways and means to solve this problem. As yet, no suggestion has really been made. I have attended many Economists' Conferences and I have asked this question in all of them. But still, nobody has been able up till now to answer this question satisfactorily. In 1954 or so, the prices went down and immediately thereafter we found that the prices went up. In 1958 also, the prices went up. Even during the Second Five-Year Plan period, the prices have gone up and also gone down. What is it all due to? One is not able to understand it. Honestly I say that I am unable to understand it. I do not think any economist or administrator or even a Commissioner of Civil Supplies has been able to give us a satisfactory answer for these ups and downs. We hear statements being made on the floor of the House. The other day when I was talking with a number of merchants, they said that they got rice from other places and that that was how they had replenished their own stocks. They still say that is being done. I do not know how far it is true or correct. This is a matter which has to be gone into by the

17th February 1959] [Sri K. Balasubramanya Ayyar]

Government thoroughly before arriving at a final decision. Whether we are really self-sufficient is a matter of doubt. The Government should consider all these aspects rather carefully and thoroughly and see whether these have got any effect on the lowering of prices. That is what I want to say so far as this particular matter is concerned.

Then, one salutary principle that has been accepted in this Bill is with reference to compounding. It is a very good thing, which has been recommended by Dr. Lokanathan. But, the limit has been put at only Rs. 25,000. It has to be increased. That is what I feel. I think there is also a demand from the merchant community in this regard. I want this to be increased not because the merchants have demanded it, but because I am myself fully convinced that if only the limit is raised to, say, Rs. 1 lakh—the Government can adopt their own slabs—it will really be very good. Let the Government consider this aspect with their experienced sales tax officials. If only they agree to this suggestion, I am sure it will go a long way to avoid harassment and other difficulties experienced by the merchants. It will relieve them of the trouble of keeping accounts, appearing before officials and all those things. At the same time, the Government could also get a good income. Now, let us see how many officials have to be employed by the Government to check evasion, hear appeals and dispose of cases and all those things. Consider the salaries and allowances that will have to be paid to a large number of them. They will also ask for increased salaries and increased allowances. There are so many such difficulties. It is not easy to check evasion even if the Government were to spend a large sum of money on the staff which they will have to employ for this purpose. Thus, the Government will have to spend lakhs of rupees before they could effectively check evasion. That is the difficulty with which we are confronted. Therefore it is I say that if the Government agree to increase the limit to Rs. 1 lakh—as I said, the Government may put a suitable slab rate according to some rough calculation—the merchants will be very much satisfied. I think there was a demand from the merchants in the recent Merchants' Conference also in this regard. So, I request the Government to look into the matter and do something. As this is a very important matter, I have made a specific mention about it.

Lastly, I would like to refer to another important aspect. I do not wish to take much time of the House by referring to all the details. I shall refer to the other matters when we take up the clauses for consideration. However, I wish to refer to clause 59. The Hon. Minister is perhaps fully convinced that that provision is proper. I know he will have that opinion. Still, I feel that it is too wide a power given to the Government. This is what is stated there. 'The Government may by notification, alter, add to or cancel any of the Schedules'. Sir, it is not a question of mere rate. It is not a question of merely altering the rate or cancelling or reducing it. It is stated '. . . alter, add to or

cancel . . .' All these things fully involve questions of policy. That is what I wish to say in this connexion. Whether a particular article should come under the multi-point schedule or the single-point schedule, whether the single-point levy on a particular article should be changed to multi-point levy and whether the rate in respect of an article should be reduced or increased or cancelled, are all matters of policy. The Legislature must have full power to consider those things in the various stages. Otherwise, there is no point in asking for the support of the Legislature to the Government's policies. As I said, these are matters of policy. When a commodity is added to a Schedule and the Government begin to collect the tax and after some time, if they cancel the tax, it will not matter much. The point to be considered is whether it will be held valid or invalid. That is the point which the Government will have to consider. I feel that this is a very wide power given to the Government. Of course, the Hon. Minister has cited the parallel of the Indian Tariff Act. I have looked into the provisions of this Tariff Act. It is a very important Act and it is for the Central Government to take sufficient steps to implement the various provisions of that Act. No doubt, we find therein the notification policy. I shall refer to this portion of that Act. No doubt it is stated there, 'The Central Government may, by notification in the Official Gazette fix, for the purpose of levying the said duties, tariff values of any articles enumerated, either specifically or under general headings, in the said Schedules as chargeable with duty *ad valorem* and may alter any tariff values for the time being in force. . . Different tariff values may be fixed for different classes of descriptions of the same article . . .' That is what is stated there. So, it is a Central subject, so to say. Now, let us see what section 3-A of that Act says. It starts like this, 'Where the Central Government upon a recommenda-
5·50 p.m. tion made to it in this behalf by (the Tariff Commission established under the Tariff Commission Act, 1951). . .' It refers to the Tariff Commission, a body appointed under a separate Act called the Tariff Commission Act. It is entrusted with the duty of looking into and surveying the whole thing and recommending from time to time on what articles duty can be levied, both in respect of import and export. That is a statutory body entrusted with this sole task. Section 3-A clearly says: 'Where the Central Government, upon a recommendation made to it in this behalf by the Tariff Commission established under the Tariff Commission Act of 1951 is satisfied that circumstances exist which render it necessary to take immediate action to provide for the protection of the interests of any industry established in India, the Central Government may by notification in the Official Gazette impose on any goods imported into India in respect of which the said recommendation is made a duty of customs of such amount not exceeding the amount proposed in the said recommendation, as it thinks fit.' Therefore, the Tariff Commission should advise and the advice should be in the interests of the industry. Then the Government should be satisfied that to provide for the protection

17th February 1959] [Sri K. Balasubramanya Ayyar]

of the interests of the industry, it is necessary to take immediate action. All these conditions should be satisfied. Then, where a notification is issued, a Bill should follow it during the next session of Parliament following the date of issue of the notification. Now let us look at section 4-A. It says: ' Where in respect of any article, whether included in the Second Schedule or not, the Central Government is satisfied that the export duty leviable thereon should be increased or that an export duty should be levied, and that circumstances exist which render it necessary to take immediate action, the Central Government may, by notification in the Official Gazette, direct an amendment of the Second Schedule to be made so as to provide for an increase in the export duty leviable, or, as the case may be, the levy of an export duty, on that article.' Then the condition follows that ' every such notification shall be laid before Parliament, if it is sitting, as soon as may be after the issue of the notification, and if it is not sitting, within seven days of its re-assembly, and the Central Government shall seek the approval of Parliament to the notification by a resolution moved within a period of fifteen days beginning with the day on which the notification is so laid before it.' So, if Parliament is sitting, it should be done immediately. Otherwise, it should be done within seven days of its re-assembly. So, these are hedged in with so many qualifications. But the provision in the Sales Tax Bill gives power to alter, add to or cancel any of the Schedules, all by notification. The Act bristles with questions of policy. Nobody is sure whether every transaction is taxable. As the Hon. Minister himself has said on many occasions, the merchants themselves are not sure whether single-point levy is good or multi-point levy is good. So, I do not want Government to precipitate matters. The Government are given a *carte blanche* which is much more than their Ordinance-making power. The Ordinance-making power can be used when the Legislature is not in session but there it has to be regularized later by introducing a Bill. Sir, Article 265 of the Constitution says that a tax can only be levied by authority of law. Here it is said when a notification is cancelled by the Legislature, it will be without prejudice to the action alraedy taken. They have collected some money under the notification but that lacks authority of law in the real sense. Whether constitutional or unconstitutional, the Government should not be given such a wide power.

SRI A. M. ALLAPICHAI : What about sub-clause (2)?

SRI K. BALASUBRAMANYA AYYAR : That does not come anywhere near what I have mentioned. The Government need not take this power. They have always got the power to issue Ordinances and they have used this power most in sales tax matters, e.g., motor spirit tax.

SRI A. GAJAPATHY NAYAGAR : How is clause 59 different from clause 17?

[17th February 1959

SRI K. BALASUBRAMANYA AYYAR: We ourselves give power to the Government to exempt certain articles. But this is not that power. This is to add, vary or cancel by notification. I would, therefore, ask whether we should give such a wide power to the Government. There are many other points which I want to mention but I shall do so when the amendments are taken up.

MR. CHAIRMAN: The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow.

The House then adjourned.

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 108. *Fourth Report of the Committee on Estimates* (1958–59), *on Agricultural Experimental Farms, Agricultural Demonstration and Propaganda including Public Exhibitions and Fairs.*

† *Bill passed by the Assembly and received therefrom in the Council.*

*The Madras General Sales Tax Bill*, 1959 (*L.A. Bill No.* 6 *of* 1958).



* Laid on the table of the House on 16th February 1959.

† Sent by Special Messenger to all M.L.Cs. on 17th February 1959.